[22nd February 1961

*Erode-Karur Road*

* 391 Q.—SRI K. R. NALLASIVAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை ஜில்லா ஈரோட்டிலிருந்து கரூர் போகும் பாட்டையில் 21/1 மைலில் வெங்கம்பூர் ரயில்வே பாலத்துக்கடியில் போகும் மேற்படி பாட்டையை 21/2-ல் ரயில்வே லயன் மேல் மாற்றி, மேற்படி பாட்டையை மாற்றும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(இ) அப்படியாயின் வேலை எப்போது ஆரம்பமாகும் ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The work has been approved by the Government and it will be taken up for execution after the detailed estimate is technically sanctioned.

SRI K. R. NALLASIVAM : சுமார் எத்தனை நாட்களில் வேலை எடுத்துக்கொள்ளப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : 1961-62-ல் இந்த வேலை எடுத்துக் கொள்ளப்படும்.

**Rents (lands)**

* 392 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether this Government have received any communication from the Centre about the recommendations of the Land Reforms Committee regarding the reduction of rents of the tenants, prevention of binami transfer of lands by the landlords during 1960; and

(b) if so, the details thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) The Panel on Land Reforms, Planning Commission, has not yet finalized its recommendations.

SRI N. K. PALANISAMI : மத்திய சர்க்காரிடமிருந்து இந்த சர்க்காருக்கு உச்ச வரம்பு சம்பந்தமாக நிலச் சீர்திருத்தக் குழுவினுடைய ஆலோசனைகள் வந்தனவா ? அல்லது, ஏதாவது தகவல்கள் வந்தனவா ? அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி ஆலோசிக்க நம் அரசாங்கம் சார்பாக ரெவினியூ போர்டு மெம்பர் ஒருவர் போய்க் கலந்துகொண்டார். அவர்கள் எல்லோரும் அதை அலசிப் பார்த்திருக்கிறார்கள். முடிவாக என்ன சிபார்சு செய்திருக்கிறார்கள் என்று இன்னும் தெரியவில்லை.